


□
பறவையின் பாதை
(கவிதைகள்)
□
அப்துல் ரகுமான்
□
முதல் பதிப்பு : ஆகஸ்ட் 2006
□
இரண்டாம் பதிப்பு : மார்ச் 2010
□
உரிமை
மெஹ்பூப் பேகம்
□
வடிவமைப்பு
**afigrafik**
98402 77450
□
அச்சு
நொவினோ ஆப்செட் பிரிண்டிங் கம்பெனி
ஐஸ் அவுஸ், சென்னை - 600 005.
தொலைபேசி : 28446891
□
வெளியீடு
நேஷனல் பப்ளிஷர்ஸ்
2, வடக்கு உஸ்மான் சாலை,
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 2834 3385
□
விலை
ரூ. 55.00



# முன்னுரை

தேவ கிரணங்கள் தீண்டும்போது
படிமங்கள்
பூக்களாய் மலர்கின்றன

அழகான படிமங்கள்
அர்த்த கர்ப்பமுள்ள
படிமங்கள்

இந்தத் தொகுதி
படிமங்களின் பூங்கா

மலர்களின்
வடிவம் வேறாக இருக்கலாம்
வண்ணம் வேறாக இருக்கலாம்
வாசம் வேறாக இருக்கலாம்

ஆனால்
தேன் ஒன்றுதான்

மேலும்
இந்தப் பூக்களின்
வேர்கள்
'பூமி'க்கு அடியில்
அந்தரங்க உறவு
கொண்டவை

இப்போதெல்லாம்
என்னால்
இப்படித்தான்
எழுத முடிகிறது

இந்தத் தொகுதியில்
பெரும்பாலும்
'சூஃபி'க் கவிதைகள்

அந்த வகையில்
இது தமிழில்
முதல் 'சூஃபி'ப்
புதுக் கவிதைத் தொகுதி

புதுக் கவிதையில்
இது ஒரு
புதிய பரிமாணம்
புதிய பரிணாமம்

**அப்துல் ரகுமான்**
*17.08.06*

# பொருளடக்கம்



# மேய்ச்சல்

'என்னை மனிதனை விட உயர்த்து' என்று
இறைவனிடம் கேட்டேன்

அவன் என்னைப்
பசுவாக்கினான்
அவனே என்
மேய்ப்பனும் ஆனான்

அவன் என்னைக்
காயாத மேய்ச்சல் நிலங்களுக்கு
ஓட்டிச் சென்றான்

அவனே எனக்கு
மேயவும், அசை போடவும்
கற்றுக்கொடுத்தான்

நான் சூரியனையும்
நட்சத்திரங்களையும்
மேய்ந்தேன்
சப்தங்களையும், ரசங்களையும்
மேய்ந்தேன்

வாசனைகளையும், ஸ்பரிசங்களையும்
மேய்ந்தேன்

மேய்ந்தவற்றை அசைபோட்டபோதுதான்
புற்கள் பல வகை என்றாலும்
அவற்றின் சாரம் ஒன்றுதான்
என்பதை அறிந்தேன்

பிறகு, என் மேய்ப்பன் என்னை
வெட்ட வெளிக்கு ஓட்டிச் சென்றான்
அங்கே ஒரு புல்கூட இல்லை

மேய்ச்சல் நிலங்களிலேயே
அது மேலானதாய் இருந்தது

அங்கேதான் நான்
அதிகமாக மேய்ந்தேன்

பசி அதிகரிக்க
என் மேய்ப்பனையே மேய்ந்துவிட்டேன்

நான் மேய்ந்ததெல்லாம்
என் ரத்தமானது
என் மடி
ரத்தத்தைப் பாலாக்கியது

முட்டிக் குடிப்பவர்களுக்கும்
கறப்பவர்களுக்கும்
என் மடி பால் சுரக்கிறது

குடிப்பதற்கோ, கறப்பதற்கோ
யாரும் இல்லை என்றாலும்
என் பால், காம்புகளின் வழியே
கசிந்து சிந்துகிறது

□



'பாக்யா' 30.12.97



## ஒளிதல்

கொளுத்தப்பட்ட கற்பூரம் போல்
உன் காதலால்
நான் அழிந்துபோவேன் என்று
எனக்குத் தெரியும்

அதனால் உன்னிடமிருந்து தப்ப
இருள்களுக்குள் ஓடினேன்
நீ புன்முறுவல் செய்தாய்

நான் உறக்கத்தில் ஒளிந்தேன்
நீ கனவாக வந்தாய்

நான் விதையில் ஒளிந்தேன்
நீ நீராக வந்தாய்

நான் வீணையில் ஒளிந்தேன்
நீ விரலாக வந்தாய்

நான் மொட்டுக்குள் ஒளிந்தேன்
நீ சூரிய கிரணமாய் வந்தாய்

நான் பாவத்தில் ஒளிந்தேன்
நீ மன்னிப்பாய் வந்தாய்

நான் பொய்யில் ஒளிந்தேன்
'அது என் முகத்திரை' என்றாய்

நான் சந்தேகத்தில் ஒளிந்தேன்
'அது என் விளக்கடி நிழல்' என்றாய்

நான் 'இல்லை' என்ற பாலையில்
ஒளிந்தேன்
'சிலந்திப் பூச்சியே!
என் வீட்டு மூலையில்
வலை பின்னுகிறாய்' என்றாய்





'என்னை விட்டு நீ
எங்கே ஓட முடியும்?

நான் இல்லாத இடம் ஏது
என்றாய்

'நீ என்னை விட்டு ஓடவில்லை
உன்னை விட்டு ஓடுகிறாய்
உன் பயமும் நானே
உன் ஓட்டமும் நானே
நீ ஒளியும் இடமும் நானே'
என்றாய்

பனித்துளி
வேறெங்கே ஒளிய முடியும்?
வெயிலைத் தவிர,

எனக்கும்
வேறு வழி இல்லை
உன்னிடம் ஒளிவதைத் தவிர

□

23.01.98



# முகத்திரையற்ற வதனம்

முகத்திரையற்ற
உன் வதனத்தை
தரிசிக்கும் பரவசத்தை விடவா
உன் சொர்க்கம்
இனிமையானது?

உன் தரிசனம் கிடைக்காத
என் விரக தாபத்தைவிடவா
உன் நரகம்
துயரமானது?
□



# மதன யுக்தி

அவள்
முகத்திரைக்குள் ஒளிந்திருப்பது
வெட்கத்தால் அல்ல
அது
ஆர்வத்தைக் கிளறும்
மதன யுக்தி

அனைவரையும் தழுவும்
அவள் காதல்
நாணமற்றது

ஆனால்
அதிலும் ஒரு கற்புண்டு

அவள்
பூக்களால்
பேசுகிறாள்

நட்சத்திரங்களால்
கடிதம் எழுதுகிறாள்

நிலாச் சாளரத்தில்
எட்டிப் பார்க்கிறாள்

மின்னல்களில்
சிரிக்கிறாள்

எல்லாப் பொருள்களிலும்
அவள் அழைப்பு
இருக்கிறது.

□

1996





## ஏகாந்தம்

பார்வை எதைத் தொட்டாலும்
நான் தீட்டாகிறேன்
சப்தங்கள் எல்லாம்
தூசியாய் ஒட்டுகின்றன

கூட்டத்தில்
நான் அழுக்காகிறேன்
ஏகாந்தம்
என் நீராடலாக இருக்கிறது

கடித மூட்டையில்
உங்களோடு கட்டப்பட்டிருந்தாலும்
என் மீது எழுதப்பட்ட முகவரி
உங்களுடையவற்றிலிருந்து
வித்தியாசமானது

கடலுக்குள் இருந்தாலும்
மூச்சு வாங்க
வெளியில் வரும் திமிங்கிலம் நான்

நான் வாயை மூடிக்கொள்ளும்போது
வாயில்லாதவை எல்லாம்
என்னுடன் பேசுகின்றன

நான் கண்ணை மூடிக்கொள்ளும்போது
கண்ணுக்குப் புலப்படாதவை எல்லாம்
தெரிகின்றன

மௌனக் கூட்டில் என்னை
அடைத்துக்கொள்ளும்போதெல்லாம்
எனக்குச் சிறகுகள் முளைக்கின்றன

சப்தங்களின் சந்தை
கலைந்த பிறகு
நட்சத்திரங்களின் தேவகானத்தைக்
கேட்க முடிகிறது

மொழிகளைத் தாண்டிச் செல்லும்போது
பூவின் பாஷை புரிகிறது

உள்ளேயா? வெளியிலா?
என்று தெரியாமல்
இங்கும் அங்கும்
ஊசலாடும் உலகம் இது

இங்கே
எதுவும் என் ஊரில்லை.
யாரும் என் உறவினர் அல்லர்

எங்கே சூரியனுக்கு
உதயமும் அஸ்தமனமும் இல்லையோ,
எங்கே
மேலே வேரும் கீழே கிளைகளுமுள்ள
புராதன மரம்
நிழல் பரப்புகிறதோ
எங்கே
'நான்' எனும் முடிச்சு
அவிழ்ந்து போகிறதோ

அது தான் என் ஊர்
□

16.1.98

# தல விருட்சம்

இருத்தலின் மர்மம்
ஒளிந்திருந்த விதையிலிருந்து
நீ விஸ்வரூபம் கொள்கிறாய்

உன் வேர்கள்
என் அகந்தையின்
அந்தரங்கத்தில்
நீர் குடிக்கின்றன

வார்த்தை இல்லாமல்
அர்த்தங்களை மட்டும்
எழுதும் விரல்களாய்த்
திசை வெளிகளில்
நீள்கின்றன
உன் கிளைகள்



என்னைச்
சுவனத்திலிருந்து
வெளியேற்றவே
உன்னிடம்
வைக்கப்பட்டிருக்கின்றன
விலக்கப்பட்ட கனிகள்

உன் பூக்களில்
மூச்சின் இசை
ததும்புகிறது

உன் முட்களால்
உண்டாக்கப்பட்ட
காயங்கள்
உன் நிழலில்
இளைப்பாறும்

என்னை அறையும்
சிலுவையும்
உன்னிடமிருந்தே
உண்டாக்கப்படும்

□

மின்னம்பலம்
8.12.99



## சப்த விபத்து

உற்றுப் பார்க்கும்
பழைய தெய்வத்தின்
பார்வையில்
சந்தேகம்
நிழலாடுகிறது

ஒலிகள்
தங்கள் நிறங்களைத் தேடி
அலைகின்றன

தன் மர்மத்தை நினைத்து
நடுங்கிக் கொண்டிருக்கிறது
கடல்
நிரந்தரமாக

இருட்டின்
காம வாய்
முத்தங்களை
யாசிக்கிறது

வாக்கியமாய்
அச்சுக்கோத்துக்கொண்டு
முற்றுப்புள்ளிகளை நோக்கிப்
பறக்கின்றன
பறவைகள்

பூக்களால்
அலட்சியப்படுத்தப்பட்ட
மௌனத்தின் சோகம்
சகிக்க முடியவில்லை

உயிர் எழுத்துக்களின்
கண்ணீர்த் துளிகள்
மெய்யெழுத்துக்களுக்குத்
திலகமாகின்றன

இந்த வார்த்தையில்
நான்
செத்து மிதக்கிறேன்

□

மின்னம்பலம்
8.12.99





# மீட்டப்படுவதற்கு முன்

அறிமுகம் இல்லாத இடத்திற்கு
அழைத்துச் செல்லும்
வயலின் இசையின்
ஒற்றையடிப் பாதையில்
மந்திரத்தில் கட்டுண்டு
நடக்கிறேன்

யாப்பில் அடங்க மறுத்த
மின்னல்
என்னைத் திட்டிவிட்டுப்
போகிறது

மேய்வதற்குப்
புல் கிடைக்காத சொற்கள்
அந்தியில் சோகமாக
ஊர் திரும்புகின்றன

ஒவ்வோர் இரவும்
முற்றுப்புள்ளிகளைச்
சுமந்து வந்து
வாக்கியங்களைக் காணாமல்
ஏமாற்றத்தோடு திரும்புகிறது

சிதிலமான
சிலைகளின் ஆவிகள்
பத்திரமான உடல்களைத் தேடி
அலைகின்றன

பறவைகளின் பாடல்களை
உடுத்திய சூரியன்
ஸ்தம்பித்து நிற்கிறான்

கொளுத்திப்போடும்
கண்ணீர்த் துளிகளில்
ஏதாவது ஒன்றுதான்
வெடிக்கிறது

உடைந்த படிமங்களில்
இறைவன் நடந்துபோகிறான்
'இல்லை'யில் வசிப்பதற்காக

என்னில் பிறந்து
என்னையே தின்னுகிறது
சொல்

என் நாவிலிருந்து
என்னை விடுவிக்கிறேன்

சந்திர மதுவைக்
குடித்த போதையில்
ஆடை அவிழ்க்கிறது
இரவு

'சும்மா'விற்கு நன்றி!
அது என்னை
உச்சஸ்தாயிக்குக்
கொண்டு போகிறது

□

'தினமணி' தீபாவளி மலர்
1.09.97

# கண்ணீர் விலை

நான் உன்னைப்
பூக்களில் தேடினேன்
நீ முட்களில் இருந்தாய்

நான் உன்னைப்
புன்னகைகளில் தேடினேன்
நீ கண்ணீரில் இருந்தாய்

நான் உன்னை
ஆலயங்களில் தேடினேன்
நீ உடைந்த உள்ளங்களில்
இருந்தாய்

உன்னிடம் நான்
எதையும் கேட்க
வரவில்லை
என்னைக் கொடுக்க வந்தேன்



பூவின் மீது படிந்த புழுதியைப்
பனித்துளி கழுவுவது போல்
என் இதயத்தை
என் கண்ணீரால்
கழுவிவிட்டேன்
இப்போது அது
உனக்குச் சமர்ப்பிக்கும்
தகுதி பெற்றுவிட்டது

உன் ஊரின் பாதையில்
முட்கள்
ஒவ்வொரு முள்
குத்தும்போதும்
நீ முத்தமிடுவதாக எண்ணிப்
புளகாங்கிதம் அடைகிறேன்



உன் கண்ணியில்
நான் சிக்கிக்கொண்டேன்
விடுதலையைவிட
இந்தச் சிறை
எவ்வளவு ஆனந்தமானது

வாழ்க்கையா? மரணமா?
எதையேனும் தேர்ந்தெடு
என்றாய்
நான் வாழ்க்கையைத்
தேர்ந்தெடுத்தேன்
அதுவோ
மரணம் நோக்கி
அழைத்துச் செல்கிறது

மூச்சு வாங்கும்போதெல்லாம்
பிறக்கிறேன்
வெளிவிடும்போதெல்லாம்
இறக்கிறேன்
ஒரே பிறவியில் எனக்கு
எத்தனை பிறவிகள்

'எளிதில் அடைய முடியாத உன்னை
நான் எப்படி அடைந்தேன்'
என்று கேட்கிறார்கள்
'கண்ணீரை
விலையாகக் கொடுத்து'
என்கிறேன் நான்

காதலுக்காகவே
நீ என்றும் நான் என்றும்
ஆனோம்
காதல் உண்டானபின்
நீ ஏது? நான் ஏது?

□



# கிழிந்த வேதம்

பூசை பெற்ற
விக்கிரகங்கள்
வெறிபிடித்துப்
பூக்களைக்
கடித்துக் குதறுகின்றன

குலுக்கிய நிலையில்
வெட்டப்பட்டுக் கிடக்கின்றன
கரங்கள்

ரத்த மழையில்
தெரியாமல் போனது
கண்ணீர்

இடிபாடுகளில்
வித்தியாசம் தெரியவில்லை
கோபுரத்துக்கும்
மினாராவுக்கும்

அந்தரங்கத்தில்
வேர்கள்
சந்தித்துக் கொள்வதை
அறியாத கிளைகள்
சண்டையிட்டுக் கொள்கின்றன
காற்றின் தூண்டலால்

தூரத்திலிருந்து
அழைக்கிறது
நம்பிக்கை இழக்காத
புல்லாங்குழல்
□



# மர்மப் பாதைகள்

அவளைச் சந்திக்க
ஒவ்வொரு முறையும்
ஒவ்வொரு பாதையில்
செல்கிறேன்

பௌர்ணமி நிலா
கடல் நீரில் போட்ட
சரிகைச் சாலையில்...

சட்டெனக்
கிளை பிரிந்தோடும்
மின்னலின் கொடிப் பாதையில்...

இரவின் ஏகாந்தத்தில்
தொலைவிலிருந்து கேட்கும்
புல்லாங் குழலின்
சோக ஆலாபனையில்...

அந்தி இருளில்
ரகசியமாகப் பூத்த பூவிலிருந்து
புறப்படும் நறுமணத்தில்...

ஊதுவத்தியிலிருந்து எழுந்து
சாவகாசமாக வளைந்து நெளிந்து

போகும் புகையில்...கூடு திரும்பும் பறவையின்
சிறகிலிருந்து உதிர்ந்த இறகு
கீழே விழும் ஊஞ்சலாட்டப்
பாதையில்...

முற்றுப்புள்ளிக்கு
அப்பாலும் கசியும்

கவிதை வாக்கியத்தில்...காரணம் இல்லாமலே
கண்களில் சுரந்து சொரியும்
கண்ணீரில்...

கனவு
கைப்பிடித்து அழைத்துச் செல்லும்
மர்மப் பாதையில்...

நான் நடந்து சென்றிருக்கிறேன்

அவளைப் போலவே
அவளை அடையும் பாதைகளும்
மர்மமானவை
அழகானவை

பாதையைப் பற்றி
எப்போதும் நான்
கவலைப்பட்டதில்லை

ஏனெனில்
எல்லாப் பாதையும்
அவளையே அடைகின்றன.
□

'பாக்யா'
29.01.98

# வைகறைக் கடிதம்

இத்தனை நாளாய்
இரவு விடியும்போதெல்லாம்
நான் விடிந்ததில்லை

இன்றுதான்
விடிந்திருக்கிறேன்

இரவுச் சமாதியிலிருந்து
உயிர்த்தெழுந்திருக்கிறேன்

சிலுவையறைந்த காயங்கள்
ஆறியிருந்தன

வைகறையின் வாயில்
மௌன வாழ்த்து இருந்தது
'சாந்தி'



இந்த வைகறையில்,
உலகம்
நேற்று வரை
நான் பார்த்த உலகமாய் இல்லை

இந்தப் புனிதப் பொழுதில்
வசவாக இருந்த உலகம்
தேவ கீதமாக ஒலிக்கிறது

ஒவ்வொரு விடியலும்
தங்க நீரால்
பூமியைப் புனித நீராட்டுகிறது
அதன் பாவங்களை
மன்னித்து விடுகிறது

இப்போது என்னால்
வைகறையை
வாசிக்க முடிகிறது

வைகறையை வாசிக்க
நட்சத்திரங்களிடம்
கற்றுக்கொண்டேன்

ஓ! ஒவ்வொரு வைகறையும்
காதலியின் கடிதம்
அதில் அவளுடைய
சரச சல்லாபமும்
முத்தங்களும் இருக்கின்றன

சந்திக்கும் இடம் பற்றி
சங்கேதமும் இருக்கிறது

இப்போதெல்லாம் நான்
வைகறையின் வரவுக்கு
ஆவலோடு காத்திருக்கிறேன்.
□

6.2.98

# பறவையின் பாதை

பறவையைப் போல், நான்
பயணம் செய்கிறேன்

என் பாதை
என் சொந்தப் பாதை

எந்த அடிச் சுவடும்
கறைப்படுத்தாத,
யாரையும் பின்பற்றாத,
யாரும் பின்பற்ற முடியாத,
அரூபப் பாதை

அந்தப் பாதையில்
சாலை விதிகள் இல்லை
விபத்துக்கள் இல்லை

உங்கள் பாதைகள்
உங்கள் ஊர்களுக்குச்
செல்கின்றன





என் ஊருக்கு
உங்கள் பாதையில்
எப்படிச் செல்ல முடியும்?

எனவே,
நான் என் பாதையில்
செல்கிறேன்

பூமியின் ஆகர்ஷணங்களிலிருந்து,
உருவத்தின் வரம்புகளிலிருந்து,
அடையாளங்களின் கூண்டிலிருந்து,
விடுபட்டுப் பறக்கிறேன்

அதனால் சர்வமாகிறேன்

எனக்குள் எல்லாம்
எல்லாவற்றிலும் நான்

அந்த சுதந்திரப் பயணத்தில்,
திசைகளற்ற பாதையில்
நான் என்னைச் சந்திக்கிறேன்

பசித்த பறவை
இரை தேடப் பறக்கிறது
களைத்த பறவை
கூடு திரும்புகிறது

எனக்குப் பசியுமில்லை
களைப்பும் இல்லை

உதிர்ந்த சருகுகளாலும்
உடைந்த சுள்ளிகளாலும்
கட்டப்படும் கூடு
எனக்கானதல்ல
□

12.2.98

# விலாசம்

நேற்றுப் பார்த்தேன்

ஆலயம் இருந்தது
மனிதனுக்கும் மனிதனுக்கும்
இடையில்

இன்று பார்த்தேன்

ஆலயம் மட்டும்
இருக்கிறது

●

தேடி அலைகிறான்
மனிதன்

இறைவனுடைய வீடு
கிடைத்து விடுகிறது

இறைவன்தான்
கிடைப்பதில்லை

●

கடப்பாரைகளோடு
சென்றுகொண்டிருந்தவர்களைக்
கேட்டேன்

'எங்கே செல்கிறீர்கள்?'

அவர்கள் சொன்னார்கள்
'ஆலயத்தை இடிப்பதற்காக'

'ஏன்?' என்று கேட்டேன்





அவர்கள் சொன்னார்கள்
'ஆலயத்தைக் கட்டுவதற்காக'

●

கற்களால்
ஆலயம் கட்டிக்கொண்டிருந்தார்கள்
நான் கேட்டேன்

'பூக்களால்
எப்போது கட்டப்போகிறீர்கள்?'

●

இறைவா!
நீ இல்லாத
இடம் உண்டா?'
என்று கேட்டேன்.

'உண்டு' என்றான்.

'எது?' என்றேன்.

'ஆலயம்' என்றான்.

'ஏன்?' என்றேன்
வியப்போடு

'மாறி மாறி
இடித்துக்கொண்டிருக்கிறார்கள்;
அதனால் அங்கே
இருக்க முடியவில்லை' என்றான்

●

இடிக்கப்பட்ட தன் வீட்டிலிருந்து
கல் பொறுக்கிக்கொண்டிருந்தான்
இறைவன்

'எதற்கு?' என்றேன்.

'எனக்காக வீடு கட்டியவன்
தனக்கொரு வீடின்றிக்
குளிரில் விறைத்துச்
செத்துவிட்டான்;
அவனுக்கு சமாதி கட்ட' என்றான்.

□



# மொழிபெயர்ப்பு

இறந்த காலக் கவிஞர்கள்
எழுதியது
நிகழ்காலக் கவிஞர்கள்
எழுதுவது
வருங்காலக் கவிஞர்கள்
எழுதப்போவது

எல்லாம் ஒன்றுதான்

எல்லோருமே
இறைவனின் கவிதையை
மொழிபெயர்க்கிறார்கள்

சரியாக வருவதில்லை

அதனால்தான்
எழுதிக்கொண்டேயிருக்கிறார்கள்
□



# உண்மையான பொய்

கர்ப்பம் கொண்டிருந்த
எல்லையற்ற ஆதி இருள்
பசியால் மூடப்பட்டிருந்தது

அதன் பிரசவ அலறல்
ஓங்காரமாய் எழுந்து வெடித்தது

சத்தியம்
தன் மர்ம ஆடையைச்
சிறிது விலக்கியது

அந்தரங்கத்தில் இருந்து
நீ அம்பலத்துக்கு வந்தாய்

பொடித்தன மயிர்கள் புரண்டன புகைகள்
மடித்தன இதழ்கள் மருண்டன திசைகள்
வெடித்தன தழல்கள் வெருண்டன இருள்கள்
இடித்தன ஒலிகள் இருண்டன ஒளிகள்

விடையில்லாத
விடுகதை

நீ
வாலிபத்தின் ஆசை
வைதவ்யத்தின் பெருமூச்சு
பசியின் புரட்சி
பரிணாமத்தின் சிறகு

எல்லாம் உன் மேடை
ஓயாதது உன் நடனம்

உன் பிரபாவம்
சகல பிரபஞ்சங்களையும்
சந்தோஷப்படுத்துகிறது

ஜலப் பிரளயத்தில்
உன் தாமரை மலர்கிறது

நீ
ஆலிலையைத்
தொட்டிலாய் ஆட்டுகிறாய்

முப்புரங்களிலும்
உன் கொடி பறக்கிறது

நீ
ஊட்டும்
மதுவின் போதையில்
ஒன்று
இரண்டாகத் தெரிகிறது

உனக்கு
சுப்ரபாதமல்ல
நீ
எனக்கு
சுப்ரபாதம்
□

# பால்துளி

இரவில்
சத்திரத்தின் இருட்டில்
முகம் தெரியாத
மற்றொரு சொல்லோடு
என் சொல் படுக்கிறது

சூழலின் நிர்ப்பந்தத்தால்
இரண்டும்
கலவி செய்கின்றன
அமானுஷ்யமாய் ஒலிக்கிறது
'மாங்கல்யம் தந்துனானேனா'

கிணறு வெட்டப்
புறப்பட்ட பூதம்
என் சொல்லுக்குள் நுழைந்து
ஒளிந்துகொள்கிறது

வலையிலிருந்து தப்பி
மீண்டும் நீரில் விழும்
மீனாய்ச்
சொல்
என் வாயிலிருந்து
கவிதைக்குள் விழுகிறது



வீட்டிலிருந்து ஓடிய
சிறுவனாய்
என் சொல்
பசியோடு
ஆனால் சுதந்திரமாய்
அறிமுகமில்லாத பாதைகளில்
நடக்கிறது

இருண்ட பின் சந்துகளில்
பயந்தபடி நுழைகிறது

திடீரென்று குத்தப்பட்டு
வீறிடுகிறது

என் சொல்
வலை பின்னுகிறது
பிரபஞ்சத்தின்
மர்ம சமுத்திரத்தில்
வீசுகிறது
எது கிடைத்தாலும்
வியந்து கொண்டாடுகிறது

மேலே இருந்து
கீழே இறங்கும்
என் சொல்
உடல் தேடி அலைகிறது
சிலுவையில்
அறையப்பட முடியாத
உடல் தேடி

என் சொல்
ரகசியமாக
என் காதில்
முணுமுணுத்தது

'நான் உன்
ஆதித் தாயின்
பால்துளி'

□

'குமுதம்'
27.01.2000



## நகக் குறிகள்

உன் வாக்கின் கிளைகளில்
தேவதைகள் வசிக்கின்றன

இருளின் கர்ப்பத்தில் ஒளி
ஒளியின் கர்ப்பத்தில் இருள்
எல்லாவற்றிலும்
உன் சௌந்தர்யத்தின் பிரசன்னம்

உன் இருளில்
மின்மினிகளாய் அலைகின்றன
என் வார்த்தைகள்

என் விரக தாபம்
உன்னை அலங்கரிக்கிறது

என் இருளை
மையாக்கி
உன் புதையல்களைக்
கண்டு பிடிக்கிறேன்

ஒளியை
முதற்படியாகக் கொண்ட
வழியில்
கண்ணீர்
என்னை அழைத்துச் செல்கிறது

இந்தக் கவிதைகள்
உன் நகக்குறிகள்
□

# பாடல் ஆடை

வானவில்லில்
அம்பாக
நீ தொடுக்கப்படுகிறாய்

குறிப் பலகையாய்
நான்

நீ நட்சத்திரங்களில்
சிதறிக் கிடந்தாய்
என் கவிதை உன்னை
ஒன்றாய்த் திரட்டியது

வெட்கப்படும்போது
பூப்படைந்த நிலா
உன் பேச்சில்
ஒளிர்கிறது

என் மறந்துபோன
பாடல்களை
நீ உடுத்திக்கொள்கிறாய்

என் காதலை
உன்னிடம் சொல்லும்போது
ஆதிக் கடல்
தன் வயிற்றில் உள்ளதையெல்லாம்
கக்குவதுபோல் இருந்தது

நீ சம்மதித்தபோது
நீ
நான் அறிந்த
எதுவாகவும் இல்லை
□

'முரசொலி' பொங்கல் மலர்
11.1.2000





# கடவுளுக்கு ஒரு கடிதம்

'அன்புடையீர்' என்று
உன் ஒருவனைத்தான்
அழைக்க முடியும்

ஏனெனில்
அக்கிரமக்காரரும் சுவாசிக்கக்
காற்றை அனுப்புகிறவன் நீ

வணக்கத்திற்குரியவன்
நீ ஒருவன் மட்டும்தான்
மனிதர்களோ
யார் யாரையோ
எதை எதையோ
வணங்கிக்கொண்டிருக்கிறார்கள்

நாம் இங்கே
நலமில்லை
நீ நலமா எனக் கேட்பது
அதிகப் பிரசங்கித்தனம்

ஒவ்வொரு மனிதனும்
நீ அனுப்பும் கடிதம்தான்
அவர்களோ
திறக்கப்படாமல்
படிக்கப்படாமல்
உனக்கே
திருப்பி அனுப்பப்பட்டுவிடுகிறார்கள்

உனக்குப்
பெயரும் இல்லை
முகவரியும் இல்லை

ஆனால்
உனக்கு எழுதும் கடிதம்
தவறாமல்
உன்னிடம் சேர்ந்துவிடும்

எழுதுவது கூடத்
தேவையில்லை
எண்ணங்களையே
படிக்கக் கூடியவன்
நீ





வெண்ணையை வைத்துக்கொண்டு
நெய்க்கு அலைகின்றவர்களைப் போல
இந்த மனிதர்கள்
உன்னைத் தேடி
அலைகிறார்கள்

கல்லால் உனக்கு
ஆலயம் கட்டுவதற்காக
இவர்கள்
உயிராலயங்களை
ஏன் இடிக்கிறார்கள் என்று
புரியவில்லை

இவர்களுக்கு
நீயும் ஒரு பொம்மை
வயதான பிறகும்
இவர்கள்
உன்னை வைத்து
விளையாடுகிறார்கள்

நீ
தொட்டுப் படைத்தவனை
இந்த மூடர்கள்
தீண்டத் தகாதவன் என்கிறார்கள்

சாந்தியே
உன் வழிபாடாயிருக்க
இவர்களோ
சண்டைகளாலேயே
உன்னை ஆராதிக்கிறார்கள்

நாம் எல்லாம்
நீ இசைத்த
ராகங்களே
உன் இசையில்
இந்த அபசுரங்கள்
எப்படி வந்தன?

நல்லவேளை
நீ மறைந்திருக்கிறாய்

நீ
சந்திரமதியின் தாலி
அரிச்சந்திரனுக்கு மட்டும்தான்
அது தெரியும்
□





# நிலா உதிக்கும்போது...

நிலா உதிக்கும்போது...
வெண் சிறகுடையவர்கள்
கிரணங்களின் வழியாகக்
கீழே இறங்கி வருவார்கள்

பூக்களில் கிறுக்கப்பட்டிருக்கும்
கெட்ட வார்த்தைகளைக்
கண்ணீரால் கழுவுவார்கள்

நிலா உதிக்கும்போது...
தொட்டிலில் உறங்கும் சொல்
திடீரென விழித்தொழுந்து
பாலுக்காக வீறிட்டழும்



நிலா உதிக்கும்போது...
பயணத்தில் களைத்துப்போன
கேள்விகள்
தங்கள் பசியிலேயே
ஓய்வெடுக்கும்

நிலா உதிக்கும்போது...
இறந்துகிடக்கும் பயங்கரவாதியின்
துப்பாக்கியிலிருந்து
வெள்ளைப் புறாக்கள்
நிலம் தேடிப் புறப்படும்

நிலா உதிக்கும்போது...
புலம்பெயரும் பறவையின்
இறகு ஒன்று உதிர்ந்து
கவிதையின் பிச்சைப் பாத்திரத்தில்
விழும்



நிலா உதிக்கும்போது...
ஆன்மா வலை பின்னுகிறது
இறைவனைப் பிடித்துத் தின்ன

நிலா உதிக்கும்போது...
எனக்குள்
நீ நுழைகிறாய்
'கம்ப்யூட்டர் வைரஸா'ய்!
□





# கவிதையின் துடிப்பு

என் விரக்தியின்
மௌனமாய்
மலர்கின்றன
தாமரைப் பூக்கள்

இரு துண்டுகளாய்க்
கிழிக்கப்பட்டு
வெவ்வேறு கைகளில்
சிக்கிய
ரகசியப் புதையலின்
வரைபடம் நாம்

இலையுதிர்காலத்தின்
சோகத்தை
உனக்கு நான்
பரிசமாகத் தருவேன்

உன்னைப்
பெறுவதும்
இழப்பதும்
என் கவிதையின்
துடிப்புகளாக
இருக்கும்
□

மின்னம்பலம்
21.12.1999

# பூ வாசல்

சப்தம் கேட்டது
வெளியில் வந்து
பார்த்தேன்
ஒன்றும் இல்லை

எங்கே
பூக்கள் இருக்கின்றனவோ
அங்கே
வாசல்கள் இருக்கின்றன

விலகிப் போ!
உன் வைக்கோல் கன்றுகளுக்கு
என் கண் சுரக்காது

உன் சபையில் அமர
எனக்கு
அருகதை இல்லை
ஆனால்
என் கவிதைகளில்
நீ அமர்கிறாய்

என்னை எனக்குப்
பலிகொடுத்தேன்
அதனால்
விடுதலை அடைந்தேன்

விளக்குகளின் சலசலப்பை
நிறுத்து
இருள் பேசட்டும்
□





# பெயர்

உன் அம்புகளிலிருந்து
தப்பிக்க
உன் கருணையையே
கவசமாக அணிந்திருக்கிறேன்

அளவற்ற அருளாளனே
என்னைக் காப்பாற்றி
உன் பெயரைக்
காப்பாற்றிக்கொள்
□



# நிலாவைக் காட்டிய விரல்

நிலாவைக் காட்ட
நீண்டது விரல்

'நகம்
முத்துச் சிப்பியைப் போல்
இருக்கிறது'
என்றான் ஒருவன்

'ஒன்றுக்குப் போகணும்போல'
என்றான் மற்றொருவன்

'இல்லை, அது நம்மை
அதட்டுகிறது'
என்றான் இன்னொருவன்

அதன் ரேகையை
ஆராய்ந்த ஒருவன்,
'ஏதோ தீமை
நடக்கப் போகிறது'
என்றான்

ஒருவன் நகத்தில்
மருதாணி பூசினான்

மற்றொருவன்
ஒரு தங்க மோதிரம்
கொண்டு வந்து போட்டான்

பிறகு,
விரல் வெட்டியெடுக்கப்பட்டு
பிரதிஷ்டை செய்யப்பட்டது

வழிபாடுகள்
தொடங்கின

ஆனால்
யாரும் பார்க்கவில்லை
நிலாவை

□

# உதிர்ந்த
# இலைகளின்
# கூக்குரல்

பூக்களில்
பாடல்களில்
ரத்தம்

இளவேனிற் காலத்தில்
உதிர்ந்த இலைகளின் கூக்குரல்
கனவுகளில் எதிரொலிக்கிறது

முதலும் மர்ம இருளில்
முடிவும் மர்ம இருளில்
வினாக்கள்
தீக்குளித்துச் சாகின்றன



இறந்த நட்சத்திரங்களின்
சாம்பலில் பிறந்த மனிதன்
சுடராக முயல்கிறான்

'கொலையுண்டவன்
உன் பெயரைக் கொண்டவன்'

'அதனால் என்ன?' என்கிறாயா
'அவனும் நீதான்'

நாய்களின் வீடுகளில்
'மனிதன் ஜாக்கிரதை'
என்ற பலகை
தொங்குகிறது

வாழ்க்கை என்பது
பிறப்புக்கும் இறப்புக்கும்
இடையில்
நிரப்புவதற்காக உள்ள
காலி இடம்
□





# கண்ணுக்குத்
# தெரியாத
# பூ

'துயரங்களின் முற்றுகையிலும்
மகிழ்ச்சியின் மடியிலும்
நீ அதே மனிதன்தான்'

கண்களின் சமுத்திரம்
வினோதமானது
நதிகள் அதிலிருந்து
உற்பத்தியாகி
சூனியத்தில் சங்கமிக்கின்றன

நீ, நான், எல்லோருமே
கண்ணுக்குத் தெரியாத
ஒரு பூவில் அமர்வதற்காகச்
சிறகடித்து அலையும்
பட்டாம் பூச்சிகளே

இமைகளுக்குள் வாழ்வது
பத்திரமாகவும்
சந்தோஷமாகவும் இருக்கிறது

பசிகளின் பாதைகள்
சூரியனை நோக்கிச்
செல்கின்றன

'யாரிடமும் எதுவும்
சொல்லாதே
எல்லோரிடமும்
அது இருக்கிறது'

கண்ணீர் நதிகளுக்கு அப்பால்
காயங்களின் தேசத்தில்
என் ராஜகுமாரி இருக்கிறாள்

எல்லாமே
நெருப்பின் அமைதியில்
பிறக்கின்றன.

□

# தறிநாடா

'பூக்கள்
உன்னிடம்
யாசிக்கின்றன போலும்'

என் வலக்கை
எழுதுவதை
என் இடக்கை
தெரிந்துகொள்ளாதபடி
பாதுகாப்பது
கடினமாக இருக்கிறது

'எல்லாப் பொருள்களுக்கும்
நான் உன் பெயரை
வைக்கப் போகிறேன்'

இந்தப் பூமியை
சபித்தது யார்?
இங்கே
பூக்களை விதைத்தால்
கட்டாரிகள் முளைக்கின்றன

'உனக்கும் எனக்கும் இடையே
தறி நாடாவைப் போல்
ஓடுகிறது
கவிதை'

பாபர் மசூதியும்
உலக வர்த்தக மையத்தின்
கோபுரங்களும்
ஆவி உலகத்தில்
கட்டிக்கொண்டு அழுகின்றன
□



# என் வெளிச்சம்

நான் கேட்டது
இந்த ஒளிகளை அல்ல

இரவில்
படுத்துவிடும் சூரியனை,
அமாவாசைகளுக்கு
விடுப்பு எடுக்கும் நிலாவை,
எனக்குப் பரிந்துரைக்காதீர்கள்

என் சிறகுகளைப் பொசுக்காத
தீபம்,
என் கண்ணைப் பறிக்காத
மின்னல்
உங்களிடம் இல்லை

கரைக்கே அழைக்கும் விளக்கு
எனக்குத் தேவையில்லை

உங்கள் தீபங்கள்
இருளை உமிழ்கின்றன

ஏற்றப்படாத
அணையாத
சுடாத
காற்றில் நடுங்காத
சுடர்
என் விலாசம் காட்டும்
வெளிச்சம்
வேண்டும் எனக்கு
□

ஜனவரி, 85





# காணாமல் போதல்

அடர்ந்த காடுகளைப்
பார்க்கும்போதெல்லாம்
உள்ளே நுழைந்து
காணாமல் போகவேண்டுமென்று
ஆசை
ஆனால் அதற்கு முன்னால்
வாழ்தலில்
சிதறிக் கிடக்கும் என்னைப்
பொறுக்கி
ஒன்று சேர்க்கும் வேண்டும்.
□

'தமிழ்க் கருத்தரங்கம்
1.1.2001



# இமைச் சொல்

சொற்களுக்கும்
இமைப் பீலி உண்டு
கண்களைப் போல

சொற்களும்
கண்ணடிக்கும்

சொற்களுக்கும்
கண்ணீர் உண்டு

சொற்களும்
உறங்கும்
சில நேரம்
ஆடை விலக

சொற்கள்
உறங்கும்போது
அழகாக இருக்கும்

மேலும், உறக்கத்தில்
சொற்களுக்குக்
கனவுகள் அகப்படும்

எனவே
என் சொற்களுக்கு நான்
தாலாட்டுப் பாடுகிறேன்
□



# புத்தாயிரம்

'புத்தாயிரம்' என்றது
பழைய வார்த்தை

பாவம்! சூரியன்
அவனுக்கு அது
தெரியாது

அவன் வழக்கம்போல்
பழைய உடையுடன்தான்
வந்தான்

மதுப்புட்டி திறக்கவில்லை
பட்டாசும் கொளுத்தவில்லை

ஆனால் அவன் கிரணங்களில்
நம்பிக்கையின் செய்தியும்
வாழ்த்தும் இருந்தன

அவையும்
எப்போதும் போலத்தான்

புதிய இயேசுவை
எதிர்பார்த்துக் காத்திருக்கிறது
பழைய சிலுவை

கால நதியில் மூழ்கிப்போன
பழைய காகித ஓடங்களே
புதிய தேதித் தாள்களாகப்
பிறந்திருக்கின்றன

புதிய வலைகளோடு
புறப்படுகிறான்
பழைய சாத்தான்

புதிய ரத்தத்திற்காகச்
சப்புக்கொட்டுகின்றன
பழைய ரத்தக் காட்டேரிகள்

புதிய ஒப்பனைகளோடு
சந்தையில் நிற்கின்றனர்
பழைய வேசிகள்



புதிய காயங்களை
உண்டாக்கக்
கூர் தீட்டிக் கொள்கின்றன
பழைய கத்திகள்

புதிய தூக்க மாத்திரைகளைத்
தயாரிக்கின்றனர்
பழைய திருடர்கள்

பசிக்குப்
புதிய சுவரொட்டி
தேடித் திரிகின்றன
புல்லை அறியாத
நகரத்து மாடுகள்

புதிய கொடிக் கம்பத்தைக்
காலுயர்த்தி
நனைத்துப் போகிறது
பழைய நாய்

சிம்மாசனத்தில் அமர்ந்த
மூளை
இதயத்தைக்
கொஞ்சம் கொஞ்சமாகச்
சாப்பிட்டுக்கொண்டிருக்கிறது

'அவதாரங்களே!
கடவுளின் தூதர்களே!
புரட்சியாளர்களே!
யாராவது வாருங்கள்
இந்தப் பரிதாபமான உலகத்தைப்
பூக்களாலும் பாடல்களாலும் ஆன
அந்தப் பழைய இடத்திற்கு
அழைத்துச் செல்லுங்கள்'.
□

'குமுதம்'
18.01.2000



## கேரம்

அடித்தது
யார் என்றும்
தெரியாது
விழுந்தது
எங்கென்றும்
புரியாது
பாவம், மனிதர்கள்
□



# நாம சங்கீர்த்தனம்

நமக்காகக்
காலி செய்யப்பட்டு
ஒதுக்கப்படுகிறது
ஒரு சப்தச் சிறை
உருவம் திருடிய குற்றத்திற்காக
நமக்குக் கிடைக்கிறது
இந்த ஆயுள் தண்டனை

இடம் போதாததாகவே
இருக்கிறது பெயர்
நம்முடைய எல்லாவற்றையும்
ஒடுக்கிக் கொண்டு
உட்கார முடிவதில்லை அதற்குள்

காற்றோ வெளிச்சமோ
உள்ளே வரச்
சாளரங்கள் இல்லை பெயரில்
இருந்தாலும்
மூச்சு வாங்க
வெளியில் வர முடிவதில்லை

பெயரில்
நாம் முகம் மறைத்துக்கொள்கிறோம்

இருந்தாலும் அதன் மீது
வலிந்து வரையப்படுகிறது
ஒரு முகம்.

பிறகு
அந்த முகத்தின் மீது நாம்
மோகம் கொள்கிறோம்
அதற்கு ஒப்பனை செய்து
முத்தமிடுகிறோம்

தெய்வங்களின்
அழுக்கேறிய
பழைய சட்டைகளை
அணிய நேரிடுகிறது
அளவு பொருந்தவில்லை என்றாலும்

அடையாளத்திற்காகத்
தேவைப்படுகிறது நமக்கு
ஒரு வண்ணான் குறி
பிறகு
அதையே உடுத்திக்கொள்கிறோம்
அதனால் அதற்குள்
காணாமல் போகிறோம் நாம்

பெயரிலிருந்து தப்பித்து
ஓட முடிவதில்லை நம்மால்
அப்படி ஓடினாலும்
காட்டிக்கொடுக்கப்பட்டுப்
பெயரிலேயே
சிலுவை அறையப்படுகிறோம் நாம்

சிறகு
நம்மைப் புதைத்துவிட்டுச்
சிலுவையை வைத்துக்கொள்கிறது
உலகம்
பிறகு
சிலுவையின் மீது
வரையப்படுகிறது
நமக்காக ஒரு முகம்
□

25.11.92

# ஆயுத பூசை

பூக்கள் உதிர்த்த
வேதங்களிலிருந்து
முளைக்கின்றன
கோரப் பற்களும்
இரக்கமற்ற நகங்களும்

மனிதக் காடுகளிலிருந்து
வேட்டைக்குப் புறப்படுகின்றன
மிருகங்கள்

புராதனச் சவப் பெட்டிகளின்
மூடியைத் திறந்து கொண்டு
தாகத்தோடு எழுகின்றன
டிரகூலாக்கள்

கரை புரண்டோடும்
ரத்த வெள்ளத்தில்
மூழ்கிவிட்டன
ஆலயங்களும்
மசூதிகளும்

சிதைத் தீயால்
நடக்கிறது
தீபாராதனை

போர்க்களத்தில் சிக்கிக்கொண்ட
பட்டாம்பூச்சியாய்
அமர்வதற்கு இடமின்றி
அலைகிறான் இறைவன்
□

தமிழன் எக்ஸ்பிரஸ்
19.12.97

# குடிபெயரும் கனவுகள்

கனவுகள்
ஏராளமாகப் பெருகின

இடம் போதாமல்
இமைகளுக்கு வெளியே
குடிபெயர்ந்தன

அகதிகளாய்த் திரிந்து
துயில் பிச்சை கேட்டுப்
பட்டினியால் செத்தன சில

குருட்டு விழிகளில்
குடியேற முண்டியடித்துச்
சண்டையிட்டுச் செத்தன சில

பசியால்
உண்மையைத் தின்று
நுரை கக்கிச் செத்தன சில

கரை புரண்டோடிய கண்ணீரில்
மூழ்கிச் செத்தன சில

வெளிச்சத்தில் சென்று
கருகிச் செத்தன சில

நடுக்கும் நனவுகளில்
விறைத்துச் செத்தன சில

விடிந்தபின் பார்த்தால்
எங்கும்
கனவுப் பிணங்கள்
◻

25.12.84



# வடுவே இல்லாமல்

பரிபூரணமாக
வாழாதவனே!
பரிபூரணமாகச்
சாகவாவது கற்றுக்கொள்

உன் கையொப்பமுள்ள
எதையும்
விட்டுச் செல்லாதே
உன் ஞாபகத்தைக் கூட

உன்னுடன்
உன் நிழல்களையும்
அழைத்துக் கொண்டு
போய்விடு

நேற்றைப் போல்
மறைந்துவிடு
எவருடைய இன்றிலும்
குறுக்கிடாதே

விளக்கின் சுடரைப் போல்
தடயமின்றிக்
காணாமல் போய்விடு

காயமாக வந்தாய்
வடுவே இல்லாமல்
ஆறிப் போ
□



# கண்ணாடிக்குப் பின்னால்

முன்பு
வயிற்றில் இருந்தான்
இப்போது
அங்கேயும் இல்லை
மனிதன்

நாம்
சொற்களால்
முகத்திரை
செய்துகொள்கிறோம்

வீட்டுக் கண்ணாடிகளுக்குப்
பின்னால்
தங்கள் அசல் முகங்களை
ஒளித்து வைத்துவிட்டுப்
போகிறார்கள்
அலுவலுக்குப் போகும்
பெண்கள்

நான் குளிக்க இறங்கும்
கடலில்
செத்து மிதப்பேன்
ஒருநாள்
அப்போது
நீ
கரையாக இரு
□



# அம்மா பசிக்குதே!

'பரித்ராணாய ஸாதூனாம்
வினாசாய சதுஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே'

'அல்லாஹு அக்பர்! அல்லாஹு அக்பர்!

'பரமண்டலங்களிலிருக்கிற
எங்கள் பரம பிதாவே,
உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக,
எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை
இன்று எங்களுக்குத் தாரும்!'



"அம்மா! பசிக்குதே..."

'எங்கள் வாக்கு இரட்டை இலைக்கே'
'உங்கள் வாக்கு உதய சூரியனுக்கே'
'நம்பிக்கைச் சின்னம் கைச் சின்னம்'
'கதிர் அரிவாளுக்கே ஓட்டளிப்பீர்'

"அம்மா! பசிக்குதே.."

'சிவப்புப் புரட்சி ஓங்குக'
'பசுமைப் புரட்சி ஓங்குக'
'வெள்ளைப் புரட்சி ஓங்குக'
'நீலப் புரட்சி ஓங்குக'
'மஞ்சள் புரட்சி ஓங்குக'
'கறுப்புப் புரட்சி ஓங்குக'
'வறுமையே! வெளியேறு'

"அம்மா! பசிக்குதே..."
□

# நீயற்ற நீ

என்னிடமிருந்து
பிரிந்து செல்வதாகவா
நினைக்கிறாய்?

இல்லை

என்னை
உன்னிடம்தான்
விட்டுச் செல்கிறாய்

உன்னிலிருந்தே
நான் உருவாக்கிய
உன்னிடம்

உன்னைவிடப்
பரிமாணங்கள் அதிகமான
உன்னிடம்



உன்னைப்போல்
புகையும் பாசியுமற்ற
உன்னிடம்

ஒரு தீபத்தைப் போல்
உன் வெளிச்சத்தையும்
உன்னோடு
எடுத்துக்கொண்டு
போக முடியாது
உன்னால்

நீ தேதித்தாள் அல்ல
என்னிடமிருந்து
கிழிந்துபோய்விட

எவற்றால் எல்லாம்
நீ நிரம்பியிருந்தாயோ
அவற்றையெல்லாம்
மிச்சம் மீதியின்றி
என்னிடம்
சமர்ப்பித்துவிட்டபின்
நீயற்ற நீயாகத்தான்
போக முடியும்
உன்னால்

நீ
எனக்காக எழுதப்பட்ட
கடிதம்
கடிதம் என்னிடம்
நீ வெறும் கூடாகத்தான்
போவாய்

அப்படியும்
உன் மேல் இருக்கும்
என் முகவரி

□

7.8.85

# நிலாத் தலை

சாலையில் அறுந்து கிடக்கும்
ஒற்றைச் செருப்பின்
சோகத்தோடுதான்
உன்னை நான் நேசிக்க முடியும்

பூக்களுக்கிடையே ஊசலாடும்
பட்டாம்பூச்சியாய்
நம்மிடையே மௌனம்

நம் கனவுகள்
இலை விரித்து
நம்மைப் பரிமாறுகின்றன

நாம் கடைசியாகச்
சந்தித்துப் பிரிந்த
அந்த இரவின் நிலாவை
அஞ்சல் தலையாக ஒட்டி
உனக்குக்
கடிதம் ஒன்று அனுப்புவேன்
என்றாவது ஒருநாள்

□

'குமுதம்'
27.1.2000





## சுவிசேஷம்

'ஐயா!
ஆணி
முள்
ஏதாவது
பிச்சை போடுங்கள்
கர்ப்பமாயிருக்கிறேன்'
என்ற குரல் கேட்டது

வெளியில் வந்து பார்த்தேன்

கன்னிமேரி!
□



## ஓயாத மழை

இதோ, மழை பெய்கிறது
அந்த மழை
நினைவுக்கு வருகிறது

எப்போது மழை பெய்தாலும்
அந்த மழை
நினைவுக்கு வந்துவிடுகிறது

நீ இப்போது
எங்கிருக்கிறாயோ?

அந்த மழை உனக்கு
நினைவுக்கு வருகிறதோ
இல்லையோ?

உனக்கும்
நினைவுக்கு வரும்

அந்த மழை
ஓயாது

இன்னும் அதன்
மின்சார ஈரம்
என்னிடம் இருக்கிறது

உன்னிடமும் இருக்கும்

அப்போது
இரண்டுங்கெட்டான் வயசு
இருவருக்கும்

கொஞ்சம் அவிழ்ந்த
மொட்டுக்களாய் இருந்தோம்

உள்ளேயும் இல்லை
வெளியேயும் இல்லை
வாசற்படியில் இருந்தோம்

இருள் புலரவும் இல்லை
விடியவும் இல்லை
அருணோதயச் சிவப்பாய்
இருந்தோம்

அந்த இரவில்
கடைக்குப் போய்
ஏதோ வாங்கிக் கொண்டு
திரும்பிக் கொண்டிருந்தோம்



திடீரென்று
மழை பிடித்துக்கொண்டது
பேய் மழை
(தேவதை மழையோ?)

உனக்கும் எனக்குமான
ரகசிய வாக்கியங்களாய்
எழுதப்பட்டன மின்னல்கள்

இருவரின் உடல்களுக்கும்
ஆணையிட்டது
இடி

வெட்கத்தால்
கண் மூடிக்கொண்டதைப்போல்
தெரு விளக்குகள்
சட்டென அணைந்தன

நீ பயந்து போய்
என் கையைப் பிடித்தாய்

அந்த ஸ்பரிசம்
என்னில் தீக் கொளுத்தியது

அந்த மழையில்
நான் தீப்பிடித்து எரிந்தேன்

இனிமையான தீ
மோசமான தீ

நீயும் எரிந்திருப்பாய்

ஏதோ இயக்க
நான் உன்னைக்
கட்டிப் பிடித்துக் கொண்டேன்
நீயும் ஒட்டிக்கொண்டாய்

இருள்
காடாய் வளர்ந்து பெருக
நாம் அதற்குள்
காணாமல் போனோம்

அப்போது மழை
எனக்குள் பெய்தது

இனிமையான மழை
மோசமான மழை

நான் விதையாய்
இருந்தேன் போலும்
திடீரென்று முளைத்து
விசுவரூபமாய் வளர்ந்தேன்

எனக்குள்ளிருந்த
எல்லாப் பூக்களும்
வெளிப்பட்டு மலர்ந்து
வசீகரமாகப் பாடின

பாதி புரிந்த
பாதி புரியாத பாடல்



ஒரு மர்ம மனோகர மாளிகையின்
கதவு திடீரென்று திறக்க
நான் உள்ளே தள்ளப்பட்டேன்

இருளும் ஒளியும்
கூடி விளையாடப்
பாதி புரிந்தது
பாதி புரியவில்லை

உனக்கும்
இப்படித்தான் இருந்திருக்கும்
உன் உடல் சொல்லியது

ஒருவரை ஒருவர் எரித்தோம்
ஒருவரில் ஒருவர் எரிந்தோம்

இனிமையான நெருப்பு
மோசமான நெருப்பு

எவ்வளவு நேரம்
அப்படி இருந்தோம்?
தெரியவில்லை

நேரம்
ஸ்தம்பித்திருந்தது

எத்தனையோ விடியல்கள்
வந்துபோய்விட்டன
அந்த இரவு மட்டும்
விடியாமல்
அப்படியே இருக்கிறது

இனிமையான இரவு
மோசமான இரவு

அந்த மழை
ஓயாது

இதோ, மழை பெய்கிறது

அந்த மழை
அந்த இரவு
அந்த நெருப்பு
என் நினைவுக்கு வருகிறது

உனக்கு வருகிறதா?

வராமல் இருக்காது

□

'தமிழன் எக்ஸ்பிரஸ்'
தீபாவளி மலர், 2000)

# படிக்க
# முடியாத
# கடிதங்கள்

சாளரம் திறந்தால்
சிநேகத்தோடு சிரிக்க
எப்போதும் காத்திருக்கும்
பக்கத்து வீட்டு மரம்

வேறு வழியின்றி
நட்புக்கொள்ள
வேண்டியதாகிவிட்டது

அறிமுகமான
மர வகைகளில்
எதுவாகவும் இல்லை
அது
எனவே
பேர் சொல்லிக் கூப்பிடவும்
முடியவில்லை

அடக்கப்
பேர் இல்லாததால்
அது
அதிகமாய் வியாபித்து
வசீகரித்தது

வெண்மையும் சிவப்பும்
அறிந்த வகைகளிலிருந்து
வித்தியாசப்பட்டுக் கலந்த
பூக்கள்

சந்தர்ப்பப் பொருத்தம்
இல்லாமல்
தோன்றிய
சிரிப்பைப் போல்

ஏதோ பேசுவது
தெரிகிறது
எனக்குத்தான்
புரிவதில்லை

என்ன பிறவியோ?
உடம்பெல்லாம் நாக்காக

சொல்ல
நிறைய
இருக்கும்போலும்

இபபடித்தான்
படிக்க முடியாமல்
போகின்றன
எனக்கு வரும்
பல கடிதங்கள்
மொழி தெரியாததால்

ஒன்று மட்டும்
புரிகிறது
மரங்கள் ஏன்
சலிக்காமல்
முளைத்துக்கொண்டே
இருக்கின்றன என்று
□

'மின்னம்பலம்'
21-12-99



# ஒரு
# தாலாட்டின்
# அழைப்பு

அந்தியின் பூ மௌனத்தில்
மார்பகத்துப் பாலாய்ச்
சுரக்கிறது தாலாட்டு

கண்ணீரால் கழுவப்பபடட
அதன் ஸ்வரங்கள் ஏறுகின்றன
பெண்மையின் ஆரோகணத்தில்

புதரை மொய்க்கும் மின்மினிகளாய்த்
தேவதைக் கதைகள் அதன் மேல்

'காயங்களே! தூங்க வாருங்கள்'
என்று அது அழைக்கிறது

தீபங்கள் அணைந்த
ஆலயங்களையும்
பார்வையற்ற ஆயுதங்களையும்
அழைக்கிறது

கருப்பையின் இதம் கொண்ட
அந்தப் பாடலுக்குள்
நான் நுழைகிறேன்
பத்திரமாய் இருப்பதற்காக
□





# கண்ணீராய்
# ஒரு புன்னகை

எல்லா இடங்களிலும்
உன் புன்னகை
என் கண்ணீரிலும்

ஒரு காலத்தில்
என்னிடமும்
ஒரு புன்னகை
இருந்தது
அது ஒரு கண்ணீர்த் துளியாய்ச்
சிந்திப் போய்விட்டது

வாழ்க்கை
ஒரு முள்காடு
உன் புன்னகையாவது
பூவாய் மலரட்டும்

□

'முரசொலி' பொங்கல் மலர் - 2001

## மாசு

காற்று
மாசடைகிறது
வெறுப்பின் முழக்கங்களால்

தண்ணீர்
மாசடைகிறது
சிந்தப்பட்ட ரத்தத்தால்

பனித்துளிகள்
மாசடைகின்றன
அனாதைகளின் கண்ணீரால்

வழிபாட்டுத் தலங்கள்
மாசடைகின்றன
மதங்களால்

புனித விளக்குகள்
மாசடைகின்றன
எரிக்கப்பட்ட மனிதர்களால்

எண்ணங்கள்
மாசடைகின்றன
புண்களால்

வேதங்கள்
மாசடைகின்றன
வண்ணான் குறிகளால்

பக்திப் பாடல்கள்
மாசடைகின்றன
வேட்டையாடப்படுகிறவர்களின்
கூக்குரலால்

நிகழ்காலம்
மாசடைகிறது
இறந்த காலத்தால்

வாழ்க்கை
மாசடைகிறது
மரணத்தால்

ராமும் ரஹீமும்
தப்பிச் செல்லப் பார்த்தர்
ஓஸோன் ஓட்டை வழியாக
□

ஒரிஸ்ஸா அனைத்திந்தியக் கவியரங்கத்துக்காக
21-4-02



# பாண்டியாட்டம்

செத்துப்போன
கண்டிப்பான கைகளால்
முன்பே போடப்பட்டிருக்கின்றன
இரக்கமற்ற கட்டங்கள்

இதில்தான் நாம்
விளையாடியாக வேண்டும்
விளையாடுவது நமக்கு
விதிக்கப்பட்டிருக்கிறது



உடைந்த கனவின்
சில்லெறிந்து
கண் மூடிக்
காலெடுத்து வைக்கிறோம்

கோட்டை மிதக்காமல்
தாண்டினோமா? இல்லையா? என்ற
தவிப்பில்
இதயம் படபடக்கிறது

ஆனால்
கண் மூடிய நடையில்
எப்படியும்
கோட்டை மிதித்து
வெளியேற்றப்படுகிறோம்
அன்றாடம்
நீயும் நானும்

இருந்தாலும்
மீண்டும் மீண்டும்
ஆடுகிறோம்

என்றாவது ஒருநாள்
கோடுகள் மிதிக்காமல்
தாண்டமாட்டோமா?
□

# வானத்தின் மரணம்

பிரமாண்டமான மயானமாகச்
சாம்பலாய்க் கிடந்தது பூமி

சிரிப்பும் பாடலுமாயிருந்த
வீடுகள் இருந்த இடங்களில்
சிதறிக் கிடக்கின்றன
மண்டை ஓடுகள்
வாக்கியங்கள் இல்லாத
முற்றுப் புள்ளிகள் போல

நிழல் உடுத்திப்
பூச் சூடிய தரை எங்கும்
குவிந்து கிடக்கின்றன
உடைந்து துருப்பிடித்த
யுத்த தளவாடங்கள்





ஏதோ பேச அசைந்து
விரக்தியில் ஒடுங்கும்
நாவுகளைப் போல
அங்கங்கே
தீச் சுவாலைகள்
எழுந்து எழுந்து
அடங்கும்

தங்கள் அர்த்தம் புரியாமல்
விழிக்கும்
கரைகளுக்கு இடையில்
செத்துப்போன நீரின்
கையெழுத்தாய்க் கிடந்தன
வறண்ட நதிகள்

வெட்டுக் காயங்களாய்
எங்கும் வெடிப்புகள்

துட்டி விசாரித்துச் செல்லும்
உறவினர்களைப் போல
கடல் அலைகள்
வரும், திரும்பும்

சுவாசம் ஆகாத சோகத்தில்
துக்கித்துப் புலம்பும் காற்று

சவத் துணியாய்
பூமியைப் போர்த்தியிருந்தது
மேகப் படலம்

பருகுவதற்கு யாருமின்றி
வீணே சுரந்து வழியும்
சூரிய சந்திர முலைப் பால்

வானம் தனக்குத் தானே
முனகிக் கொண்டது
‘மலட்டுக் கிரகங்கள்
பொறாமைப்பட்ட
இந்த பூமியில்
ஒரு காலத்தில் இருந்தது
மனிதன் என்ற
விசித்திர விலங்கு

அவன்
ஒளியால் எழுதப்பட்டவன்
இருந்தாலும்
இருட்டையே குடித்தான்





அவன் பொறியமைப்பே
சுத்தமான காற்றை
சுவாசித்து
அழுக்காக்குவதாயிருந்தது

அவன்
வயிற்றுப் பசிக்கு
இதயத்தைத் தின்றான்

பால் மடிகளைக்
கறி சமைத்தான்

அவன் கிளைகள்
வேர்களைச் சாப்பிட்டன

ஊற்றுக் கண்களையும்
அவன் குருடாக்கினான்





அவன்
சிறகுகள் செய்து
பறந்தபோது கூடச்
செத்த பிராணிகளைத் தேடும்
கழுகாகவே இருந்தான்

அவனுடைய
இயந்திரப் பறவைகள்
இட்ட முட்டைகள்
நெருப்பையே பொரித்தன

அவன் தன்
மூளைப் பட்டறையைச்
சாத்தானுக்குக்
குத்தகை விட்டான்

அணுவுக்குள்
உறங்கிக் கிடந்த
ராட்சசனைத்
தட்டி எழுப்பினான்

என் மேகக் கிண்ணங்களால்
அவனுக்கு நான்
அமுதத்தை வார்த்தேன்
அவனோ
கைம்மாறாக எனக்கு
விஷத்தை விருந்து வைத்தான்

அவனுக்காக
நான் தயாரித்த
கவச உடையை
அவனே கிழித்தான்

பூமித் திரையில்
இயற்கை வரைந்த
வர்ண ஓவியத்தை
ரத்தத்தால் அழித்தான்



உலகத்தின் சிம்மாசனம்
அவனுக்குத் தரப்பட்டது
அவனோ
நெருப்பைப் போல்
தான் பற்றிய இடங்களையும்
எரித்து
அணைந்து போனான்

இந்தப் புதிய ஆதாம்
தன் முகத்து வியர்வையால்
உண்டாக்கிய சொர்க்கத்தில்
விலக்கப்பட்ட கனி மரங்களை
இவனே வைத்தான்
இவனே உண்டான்
இவனே தன் சொந்தச்
சொர்க்கத்தை விட்டு
வெளியேறிவிட்டான்

'இவனை ஏன் பிறக்க வைத்தோம்?' என்று
இறைவன்
தன்னைத் தானே
கேட்டுக்கொள்கிறான்

பரிணாம மரத்தின்
உச்சிக் கனி
அழுகிவிட்டது

பூமியின்
சோகக் கதையை
இப்போது நான்
மின்னல்களால்
கிறுக்கிக் கொண்டிருக்கிறேன்

அந்தக் காலத்தில்
மனித வாழ்க்கையே
திருவிழாவாக இருந்தபோது
ஒவ்வோர் இரவும்
என் நட்சத்திரங்களை ஏற்றி
நான் தீபாவளி கொண்டாடினேன்



இப்போது
என் நட்சத்திரங்கள்
பூமிச் சமாதி மீது
ஏற்றி வைக்கும் தீபங்கள்

முன்பெல்லாம்
என் வர்ண வில்
பூமியின் வெற்றி ஊர்வலத்திற்கு
வரவேற்பு வளைவாக இருந்தது

இப்போதோ அது
பூமிக்கு அஞ்சலி செலுத்தும்
மலர் வளையம்

பூமியின் மரணத்திற்காகச்
சிந்திய கண்ணீர்த் துளி போல்
கடைசி மரத்திலிருந்து
உதிர்ந்த
கடைசிப் பூவை
இப்போது தேவதைகள்
ஞாபகார்த்தமாக
வைத்துக்கொண்டிருக்கிறார்கள்
□

(சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர்
திரு. பொன்னுசாமியின் மகன் நாவரசு நினைவு மலருக்கு, 21-4-02)



# மாமிச சாபம்

ஒரு மாயக் கூண்டுக்குள்
நாம் வைக்கப்பட்டிருக்கிறோம்

கூண்டின் கூரையில்
மேகங்கள் வரையப்பட்டிருக்கின்றன

கூண்டின் கம்பிகள்
கனி மரங்களைப் போல்
செய்யப்பட்டிருக்கின்றன

நாம் அமரும் கம்பி
மரக் கிளையைக் போல்
வடிவமைக்கப்பட்டிருக்கிறது

நட்சத்திரப் புழுதி படிந்த
நம் சிறகுகள்
வெட்டப்பட்டு விட்டதை
நாம் அறியோம்

கூண்டின் அழகில் மயங்கி
நாம் பறவைகள் என்பதையே
மறந்துவிட்டோம்

தேவதைகளும் மயங்கிய
பாடலைப் பாடிய நம் வாய்
இப்போது
இரை உண்பதை மட்டுமே
செய்கிறது

நாம் பேசிய மொழி
உடைந்து
நட்சத்திரங்களாகச் சிதறிவிட்டது

துர்நாற்றம் வீசும்
அழுக்கான சொற்கள்
நமக்குக்
கற்பிக்கப்படுகின்றன

சகப் பறவைகளோடு
சண்டைபோட
நாம் பழக்கப்படுத்தப்படுகிறோம்

சண்டையில்
முளைக்கும் சிறகுகளும்
உதிர்ந்துபோகின்றன

நாம் விட்டு வந்த
நம் பொதுத் தோட்டம்
ஞாபகம் இல்லை
நமக்கு





நம் ஆன்மா
விழிக்கும் தருணங்களில்
ஏதோ ஒரு தேவ கானம்
நம்மை அழைப்பதை
உணர முடிகிறது

ஆனால் பாதைகள் எல்லாம்
பனி மூட்டத்தால்
மறைக்கப்பட்டிருக்கின்றன

எப்போதாவது
உறக்கத்தின் இருண்ட ஆழத்தில்
மின்னல்களால் ஆன
நம் கூடு
தோன்றி மறைகிறது

நாமோ அதைக்
கனவென்று
அலட்சியப்படுத்திவிடுகிறோம்

நாம்
மாமிசத்தால்
சபிக்கப்பட்டிருக்கிறோம்
□



# அன்யோன்யம்

சூரியன் உறங்கிக்கொண்டிருந்தபோது
அவனுடைய ஏழு குதிரைத் தேரில்
ஏறிப் புறப்பட்டேன்

கருப்பைகளுக்குள்ளே
மரணக் குகைக்குள்ளே
கர்ப்பக் கிரகங்களினூடே
சாகாத கேள்விகளின் வழியாக
ஆதிக்கும் முன்னே
அந்தத்திற்கப்பால்

எங்கும் என்னைப்
பின் தொடர்ந்து வந்தது
வேட்டை வெறியோடு
ஆதி இருள்

மஞ்சள் நீர் தெளிக்கப்பட்டு
மாலை அணிவிக்கப்பட்டுக்
கத்திக்குக் காத்திருக்கிறது
ஒளி

சவக்குழி தோண்டும்
மண் வெட்டியாய் இறங்குகிறது
வார்த்தை

புதைக்கப்பட்ட பிரமைகளின்
சமாதிகளிலிருந்து
வசீகரமான பூக்கள்
மலர்கின்றன

□



## தமிழில்
## முதல் 'சூஃபிப்
## புதுக் கவிதைத்
## தொகுதி

உடைந்த படிமங்களில்
இறைவன் நடந்து போகிறான்
'இல்லை'யில் வசிப்பதற்காக

நான்
உன்னை
ஆலயங்களில் தேடினேன்
நீ உடைந்த உள்ளங்களில்
இருந்தாய்

எங்கே
பூக்கள் இருக்கின்றனவோ
அங்கே
வாசல்கள் இருக்கின்றன